2
Tamil

# இஸ்லாமியச்

## சட்டங்களும் ஒழுக்கங்களும்



The Cooperative Office for Call & Guidance at Al-Olaya, Sulaimaniah & North Riyadh
Under the Supervision of Ministry of Islamic Affairs and Endowment and Call and Guidance
Tel.: 4704466 / 4705222 - Fax 4705094 - P.O. Box: 87913 Riyadh 11652
ردمك: ٩٩٦٠-٨١٣-٠٨-٨

# أحكام وآداب إسلامية

## اللغة التاميلية

أعده وترجمه للغة التاميلية:

**شعبة توعية الجاليات في الزلفي**

**الطبعة الثانية مراجعة ومصححة ١٤١٧/٣هـ.**


ⓒ شعبة توعية الجاليات بالزلفي ، ١٤١٦هـ

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

الزلفي، شعبة توعية الجاليات

أحكام وآداب إسلامية

٤٠ ص ؛ ١٢ × ١٧ سم

ردمك : ٨ - ٠٨ - ٨١٣ - ٩٩٦٠

النص باللغة التاميلية

١- الإسلام - مجموعات ٢- الأخلاق الإسلامية

أ- العنوان

ديوي ٢١٣ ١٦/١٠٥٥

رقم الايداع ١٦/١٠٥٥

ردمك : ٨ - ٠٨ - ٨١٣ - ٩٩٦٠

الصف والإخراج: **شعبة توعية الجاليات في الزلفي**

# பொருளடக்கம்

# محتويات هذا الكتاب

# 1–மனத்தூய்மை இறையச்சம்

**அல்லாஹ் கூறுகிறான்: மார்க்கத்தை அல்லாஹ்விற்குத் தூய் மையாக்கியவர்களாக அல்லாஹ்வை வணங்குவதைத் தவிர வேறெதற்கும் அவர்கள் ஏவப்படவில்லை (98:5).மேலும் கூறு கிறான்:என் மார்க்கத்தில் தூய்மையாக அல்லாஹ்வை நான் வணங்குகிறேன் என(நபியே!)நீர் கூறுவீராக! (39:14). இன்னும் கூறுகிறான்:(நபியே!) நீர் கூறுவீராக! உங்களின் உள்ளங்க ளில் உள்ளவற்றை நீங்கள் மறைத்தாலும், அல்லது அதை நீங்கள் வெளிப்படுத்தினாலும் அல்லாஹ் அதை அறிகின்றான் (3:29). மேலும் கூறுகிறான்: நிச்சயமாக வானம் பூமியிலுள்ள எந்த வஸ்துவும் அல்லாஹ்விடம் மறைந்து விடாது (3:29).**

நான் ரசூல் (ஸல்) அவர்கள் கூறக்கேட்டுள்ளேனென உமருப் னுல் கத்தாப் (ரலி) அவர்கள் கூறினார்கள் "நிச்சயமாக செயல்கள் எண்ணங்களைப் பொறுத்ததே நிச்சயமாக ஒவ்வொரு மனித ருக்கும் அவர் எண்ணியதே கிடைக்கும்,, ரசூல் (ஸல்) அவர் கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் "மறுமை நாளில் எனது பரிந்துரைக்கு மிகுந்த பாக்கியமுடைய வர்கள் உளத் தூய்மையுடன் லாஇலாஹ இல்லல்லாஹ் கூறியவர் களாவார்கள்,, நிச்சயமாக நபி (ஸல்)அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா(ரலி)அவர்கள் கூறினார்கள் "நிச்சயமாக அல்லாஹ் உங் களின் உடல்களையும், உங்களின் தோற்றங்களையும் பார்ப்ப தில்லை. உங்களின் உள்ளங்களையும், செயல்களையுமே பார்க் கிறான்,, மேலும் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூதர் (ரலி) கூறினார்கள் "நீ எங்கிருந்தாலும் அல்லாஹ்வைப் பயந்து கொள். தீமைக்குப் பின் ஒரு நன்மையைத் துயர்த்தி வைத்துக் கொள்.. அது தீமையை அழித்துவிடும். மக்களிடம் நற் குணத்துடன் பழகிக் கொள்..

பயன்கள்:

1–நிச்சயமாக மனத் தூய்மை அல்லாஹ்விடம் கூலி இரட்டிப்பாக் கப்படுவதற்கு அவசியமாக இருப்பது போல செயல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கும் நிபந்தனையாக உள்ளது.

2–நிச்சயமாக அல்லாஹ் இணைவைக்கப்படுவதை விட்டும் தேவையற்றவன். அவனது திருமுகத்தை நாடித் தூய்மையாகச் செய்யப்படுவதைத் தவிர வேறு எதையும் அவன் ஏற்றுக் கொள்ளமாட்டான்.ஹதீஸ் குதுஸியில் அல்லாஹ் கூறியிருப்பதாக வந்துள்ளது "நிச்சயமாக யாரேனும் ஒரு காரியத்தைச் செய்து அதில் என்னுடன் நான் அல்லாதவனைக் கூட்டாக்கினால் அவன் கூட்டாக்கியவனுடன் அவனை நான் விட்டு விடுவேன்„

3–வானம் பூமியிலுள்ள எந்த வஸ்துவும் அல்லாஹ்விடம் மறைந்ததாக இல்லை என்ற காரணத்தால் எல்லா நிலையிலும் அல்லாஹ்வைப் பயப்படுவது அவசியமாகும்.

## 2–இணைவைத்தலைப் பற்றிய எச்சரிக்கை, தவ்ஹீதின் சிறப்பு

அல்லாஹுத் தஆலா கூறுகிறான்: நிச்சயமாக இணை வைத்தல் மிகப்பெரும் அநியாயமாகும்(31:13).மேலும் கூறுகி றான்: நிச்சயமாக அல்லாஹ் அவனுக்கு இணைவைக்கப்படு வதை மன்னிக்கமாட்டான்.அது அல்லாததை அவன் விரும்பி யவருக்கு மன்னிப்பான் (4:48). மேலும் கூறினான் (நபியே) நீர் இணைவைப்பீரானால் உமது செயல் அழிந்து விடும், நிச்சய மாக நீர் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவீரென உமக்கும், உமக்கு முன்னுள்ளவர்களுக்கும் வஹி அறிவிக்கப்பட்டுள் ளது(39:65).மேலும் கூறினான்.ஜின், மனித சமுதாயத்த வரை அவர்கள் என்னை வணங்குவதற்கே தவிர நான் படைக்க வில்லை (51:56). மேலும் கூறினான் :எல்லா சமுதாயத்தவர்களி லும் அல்லாஹ்வை வணங்குங்கள், ஷைத்தான்களை விட்டும்

**விலகிச் செல்லுங்கள்(என போதிக்கும்) தூதர்களை நிச்சயமாக நாம் அனுப்பினோம்(16:36).**

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வுக்கு எதனையும் இணை வைக்காமல் எவரேனும் அல்லாஹ்வைச் சந்தித்தால் அவர் சுவர்க்கத்தில் நுழைவார். அவனுக்கு எதையாவது இணைவைத்தவனாக அல்லாஹ்வைச் சந்தித்தால் அவன் நரகம் செல்வான்,,நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் :நாசமாக்கிவிடக்கூடிய ஏழு காரியங்களைத் தவிர்ந்து கொள்ளுங் கள். அல்லாஹ்வின் தூதரே! அவை யாவை? எனத் தோழர்கள் கேட்டனர். அல்லாஹ்விற்கு இணைவைப்பது...எனக் கூறினர். (இது ஹதீஸின் சுருக்கம்)மஆதுப்னு ஜபல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் கழுதையில் பின்னாலிருந்தபோது கூறி யதாகக் கூறினார்கள்: மஆதே! அடியார்கள் அல்லாஹ்விற்குச் செய்ய வேண்டிய கடமையும்,அல்லாஹ் அடியார்களுக்குச் செய்ய வேண்டிய கடமையும் யாதென நீர் அறிவீரா? எனக் கேட்டார் கள். அல்லாஹ்வும், அவனது தூதருமே மிக அறிந்தவர்களென நான் கூறினேன். அதற்கவர்கள் அடியார்கள் அல்லாஹ்விற்குச் செய்ய வேண்டிய கடமை அவர்கள் அல்லாஹ்விற்கு யாரையும், எதனையும் இணைவைக்காமல் வணங்க வேண்டுமெனவும் அல்லாஹ் அடியார்களுக்குச் செய்ய வேண்டிய கடமை அவ னுக்கு எதனையும் இணைவைக்காதவர்களை வேதனை செய்யா மலிருப்பதுமாகு மெனக்கூறினார்கள்.(புகாரி,முஸ்லிம்).

**பயன்கள்:**

1—ஷிர்க் ஆபத்து. அதை அல்லாஹ் தவ்பா இன்றி மன்னிக்க மாட்டான். ஷிர்க், அதுஅல்லாத அல்லாஹ்வின் நாட்டத்திற்கு கீழுள்ள மற்ற பாவங்களைப் போன்றதல்ல.

2—யார் இனணவைத்தவனாக மரணித்து விடுகிறானோ அவனது அமல் நிச்சயமாக அழிந்து விடுகிறது. அவன் நரகத்தில் நிரந் தரமாக இருப்பதற்குரிய காரணமாகவும் ஆகிவிடுகிறது.

3–தவ்ஹீதுதான் ஜின்,மனிதன் படைக்கப்பட்டிருப்பதற்குரிய பிர தான காரணமாக இருப்பதால் தவ்ஹீது சிறப்பு வாய்ந்ததாக இருக்கிறது.அதுவே சுவர்க்கத்தில் நுழைவதற்குரியக்கிய முக் கியமான காரணங்களில் மகத்தானதும் நரகத்திலிருந்து வெற்றி பெறுவதற்குரிய காரணமாகவும் இருக்கிறது.

# 3–முகஸ்துதியின் ஆபத்து, அதுவும் ஒரு ஷிர்க்

அல்லாஹ் கூறுகிறான்: **தொழுகையாளிகளுக்கு கேடுதான் அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால் அவர்கள் தொழுகை யில் அலட்சியமாக இருப்பார்கள்.அவர்கள் பிறருக்கு காண் பிக்(கவேதான் தொழு)கிறார்கள்.மேலும் அற்பமான பொருளைக் (கொடுப்பதைத்) தடுக்கிறார்கள்**(107:,4,5,6,7).

ரசூல் (ஸல்) அவர்கள் சொல்ல நான்கேட்டுள்ளேனென அபூ ஸயீதுப்னு ப.:ளாலா (ரலி) அவர்கள் கூறினார்கள் :எந்நாளில் சந்தேகமில்லையோ, எந்த இறுதி நாளில் முன்னோர்,பின்னோர் அனைவரும் ஒன்று சேர்க்கப்படுவார்களோ அந்நாளில் அறிவிப் புச் செய்யக்கூடிய ஒருவர், எவன் தனது செயலில் அல்லாஹ் விற்கு ஒருவரை இணையாக்கினானோ அவன் அவரிடமே தனக்கு நன்மையைத் தேடிக் கொள்ளட்டும் ஏனெனில் அல்லாஹ் இணைவைப்பவனின் இணையை விட்டும் தேவை அற்றவனாக இருக்கிறான் என அறிவிப்புச் செய்வார். அபூ ஸயீதில் குத்ரி (ரலி) அவர்கள் கூறினார்கள், நாங்கள் தஜ்ஜாலைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது எங்களிடையே ரசூல் (ஸல்) அவர்கள் வந்து: மஸீஹுத் தஜ்ஜாலை விட உங்களின் மீது நான் மிக வும் பயப்படக்கூடிய ஒன்றை அறிவிக்கட்டுமா?எனக் கேட் டார்கள்.ஆம் அல்லாஹ்வின் தூதரே! (அறிவியுங்கள்) என்று கூறி னோம். அதற்கு (ஸல்) அவர்கள் அது மறை முகமான இணைவைப்பெனக் கூறினார்கள். அதாவது ஒருமனிதன் தொழு வதற்காக நிற்கிறான். அப்போது அவனை ஒரு மனிதன் பார்க்

கிறான் என்பதற்காக அத்தொழுகையை அவன் அழகுபடச் செய்கிறான்.எனக் கூறினார்கள்.

**பயன்கள்:**

1–முகஸ்துதியையும், அதைச் செய்பவர்களையும் கடுமையாக எச்சரித்தல்.
2–நிச்சயமாக மனிதன் சில சமயங்களில் தன்னையறியாமலேயே முகஸ்துதியில் விழுந்துவிடுகிறான் .
3–நிச்சயமாக பிறருக்கு காட்டுவதற்காக செய்யக்கூடியவனின் செயல் மறுக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

## 4: பிரார்த்தனை

அல்லாஹுத் தஆலா கூறுகிறான் :என்னிடம் துஆச் செய்யுங்கள்உங்களின் துஆவிற்கு நான் பதிலளிக்கிறேன் என உங்கள் இறைவன் கூறுகிறான்(40:60).மேலும் கூறுகிறான் :எனது அடியார்கள் என்னைப்பற்றி உம்மிடம் கேட்டால் நிச்சயமாக நான் சமீபமாக இருக்கிறேன்.என்னிடம் பிரார்த்தித்தால் பிரார்த்திப்பவனின் பிரார்த்தனைக்கு நான் பதிலளிக்கிறேன் (என நபியே நீர் கூறுவீராக). (2:186). மேலும் கூறுகிறான் :உங்களின் இறைவனிடம் பணிவாகவும், அந்தரங்கமாகவும் துஆச் செய்யுங்கள் வரம்பு மீறுபவர்களை நிச்சயமாக அவன் நேசிக்க மாட்டான்(7:55).

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக நுஃமானுப்னுபஷீர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: துஆவே வணக்கம். நிச்சயமாக ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அடியான் தனது இறைவனுக்கு மிக நெருக்கமாக இருப்பது அவன் சுஜூதிலிருக்கும் நிலையாகும் எனவே (அதில்) துஆவை அதிகப்படுத்திக்கொள்ளுங்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: ரசூல் (ஸல்)அவர்கள் குறைந்த வார்த்தைகளில் நிறைந்த அர்த்தங்களை உள்ளடக்கிக்

கொள்ளும் துஆவை விரும்பக்கூடியவர்களாகவும் மற்றவற்றை விடுபவர்களாகவும் இருந்தார்கள்: ரசூல்(ஸல்) அவர்கள் கூறிய தாக உபாதத் இப்னுஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறினார்கள்: முஸ்லிமான எந்த ஒரு அடியானும் ஏதேனும் ஒரு துஆவைச் செய்து அதை அல்லாஹ் அவனுக்கு கொடுக்காமல் விடுவதில்லை அல்லது மறுமையில் அ(வன் கேட்ட)தைவிட சிறந்ததை அல்லாஹ் அவனுக்கு சேமித்து வைக்கிறான். அல்லது அவனை விட்டும் தீங்குளை அவன் துஆ கேட்ட அளவிற்கு தடுத்து விடுகிறான்.(இம் மூன்றில் ஒன்று கிடைப்பதற்கு நிபந்தனை) பாவத்தையோ அல்லது சொந்தபந்தங்களை முறிப்பதையோ பற்றி பிரார்த்தனை செய்யாமலிருக்க வேண்டும்,, மேலும் ரசூல் (ஸல்) அவர்கள் சொல்பவர்களாக இருந்தார்கள என அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஒரு முஸ்லிம் தனது சகோதரனுக்காக மறைந்திருந்து செய்கின்ற துஆ அங்கீகரிக்கப்படும். அவனது தலைப் பாகத்தில் (அவனுக்காக) ஏற்படுத்தப்பட்ட ஒரு மலக்கிருப்பார். இவன் தனது சகோதரனுக்காக நன்மையை வேண்டி துஆச் செய்யும் போதெல்லாம் இவனுக்காக ஏற்படுத்தப்பட்ட அம்மலக்கு ஆமீன் எனவும் உனக்கும் இது போன்று கிடைக் கட்டுமாக! எனவும் கூறுவார்.

**பயன்கள்:**

1–துஆ ஒரு வணக்கம். அல்லாஹ் அல்லாதவர்களிடம் துஆக் கேட்பது கூடாது. யாரேனும் இறைவனல்லாதவனிடம் துஆக் கேட்டால் நிச்சயமாக அவன் இணைவைத்தவனாகி விடுகிறான். ரசூல் (ஸல்) அவர்கள் துஆவை வணக்கமாகவும், வணக்கத்திலேயே மிக முக்கியமான கடமையாகவும் கணித்திருப்பதால் துஆவிற்கு மகத்தான அந்தஸ்திருப்பதை அறிந்து கொள்.

2–ஜவாமிவுல் கலிமைக் கொண்டு துஆச் செய்வது விரும்பத்தக்கதாக்கப்பட்டிருப்பது போல துஆவில் சப்தத்தைத் தாழ்த்திக் கொள்வதும் விரும்பத்தக்கதாக்கப்பட்டிருக்கிறது. ஜவாமி

வுல் கலிமென்பது குறைந்த வார்த்தைகளில் நிறைந்த அர்த் தத்தை உள்ளடக்கிய துஆவாகும்

3–ஒரு மனிதன் தனக்கு அல்லது தனது பொருளுக்கு அல்லது தனது குழந்தைகளுக்கு பாதகமாக துஆச் செய் வது பற்றிய எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது.

4–முஸ்லிம்களுக்காக மறைவிலிருந்து துஆச் செய்வதை விரும்பத்தக்கதாக ஆக்கப்பட்டுள்ளது.

5–துஆச் செய்பவனுக்கு அவன் கேட்பது கொடுக்கப்படுவது கட்டாயமல்ல. எனினும் அவனது துஆவின் காரணமாக அவன் துஆக் கேட்ட அளவிற்கு அவனை விட்டும் தீமை தடுக்கப்படுகிறது அல்லது மறுமை நாளில் அவனுக்காக சேமித்து வைக்கப்பட்டு அதன் பால் அவன் மிகத் தேவையு டையவனாக இருக்கும் போது கொடுக்கப்படுவான்.

6–ஹராமான பொருளை உண்பதும், ஹராமான ஆடையை அணிவதும் துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதைத் தடை செய்து விடுகின்றன.

# 5: கல்வி

அல்லாஹ் கூறுகிறான்: கற்றவர்களும்,கல்லாதவர்களும் சமமாவார்களா?என (நபியே) நீர் கேட்பீராக (39:9).மேலும் கூறுகிறான்: உங்களில் ஈமான் கொண்டவர்களுக்கும், கல்வி கொடுக்கப்பட்டவர்களுக்கும் அல்லாஹ் பதவிகளை உயர்த்து வான் (58:11). இன்னும் கூறுகிறான் "எனது நாயனே எனக்கு கல்வியை அதிகமாக்குவாயாக என (நபியே) நீர் கூறு வீராக! (20:114). இன்னும் கூறுகிறான் நிச்சயமாகஅல்லாஹ்வின் அடியார்களில் அவனுக்கு பயப்படுபவர்கள் அறிஞர்கள்தாம் (35:28). ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக முஆவியா (ரலி) அவர்கள் கூறினார்கள் "அல்லாஹ் யாருக்கேனும் நன்மையை நாடியிருந் தால் அவரை மார்க்கத்தில் விளக்கமுடையவராக்கி விடுவான்,,

இன்னும் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் "யாரேனும் ஒருவர் கல்வியைக் கற்றுக் கொடுத்தால் அதைக் கொண்டு செயல்பட்டவரின் நன்மையும் அவருக்குக் கிடைக்கும் எனினும் செய்தவனின் கூலியில் எதுவும் குறைக்கப்படமாட்டாது„ இன்னும் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் "ஆதமின் மகன் மரித்து விட்டால் மூன்று காரியங்களைத்தவிர வேறு எல்லாக்காரியங்களும் அவனைவிட்டும் நின்றுவிடுகிறது.(அவை) நிலையான தர்மம். பயனுள்ள கல்வி அவனுக்காகத் துஆச் செய்யும் நல்ல குழந்தை, மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஸஹ்லுப்னு ஸஃது (ரலி) அவர்கள் கூறினார்கள் "அல்லாஹ்வின் மீது ஆணையாக அல்லாஹ் உன் மூலமாக ஒரு மனிதனுக்கு நேர்வழி காட்டுவது சிவந்த ஒட்டகங்களைவிட உனக்கு சிறந்ததாகும்„ நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹிப்னு அம்ருப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் "என் மூலமாக ஒரு செய்தி தெரிந்திருந்தாலும் அதை பிறருக்கு எடுத்துச் சொல்லுங்கள்„

**பயன்கள்:**

1–இந்த ஆயத்துக்களிலும், ஹதீஸ்களிலும் கல்வியின் சிறப்பும், அறிஞர்களின் சிறப்பும் விளக்கப்பட்டிருக்கிறது. கல்வியைத் தேடுவது சுவர்க்கம் புகும் காரணங்களில் ஒன்றாக இருப்பது போல மார்க்கத்தில் விளக்கம் பெறுவது அல்லாஹ் அடியானுக்கு நன்மையை நாடியிருப்பதின் மீது ஆதரமாக இருக்கிறது.

2–மக்களுக்குக் கல்வியைக் கற்றுக் கொடுப்பது, அவர்களுக்கு நன்மையை அறிவித்துக் கொடுப்பது, கல்வியை எத்தி வைப்பது இவை குறைவாயிருப்பினும் கூலி மகத்தானது. மேலும் அவை மனிதன் மரித்த பின்னும் பயனளிக்கின்றன .

3–கல்வியைத் தேடுவது உபரியான வணக்கங்களை விட மிகச் சிறந்தது.

4–குழந்தைகளை நல்ல முறையில் வளர்ப்பதில் அக்கறை செலுத்துவது.

# 6 –நன்மையை ஏவுதல் தீமையைத் தடுத்தல்

அல்லாஹ் கூறுகிறான் மக்களுக்காகத் தோற்றுவிக் கப்பட்ட (சமுதாயத்தில்) சிறந்த சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள் நன்மையை ஏவுகிறீர்கள்,தீமையைத் தடுக்கிறீர்கள், அல்லாஹ்வை நம்புகிறீர்கள்(3:110). மேலும் கூறுகிறான்:மேலும் (மக்களை) நன்மையின் பக்கம் அழைப்பவர்களாகவும், நல் லதை ஏவுபவர்களாகவும், தீமையைத் தடுப்பவர்களாகவும் உங்களில் ஒரு கூட்டத்தார் இருக்கட்டும். அவர்களே வெற்றி பெற்றவர்கள்(3:104).

ரசூல்(ஸல்)அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேன் என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி)அவர்கள் கூறினார்கள் "உங்களில் யாரே னும் தீமையைக் கண்டால் அதை அவர் தன் கையால் தடுக்கவும் அதற்கவர் சக்தி பெறவில்லையென்றால் அவர் தன் நாவால் தடுக்கவும் அதற்கும் அவர் சக்தி பெறவில்லையென்றால் தனது உள்ளத்தால் அவர் அதைத் தடுத்துக் கொள்ளவும். இது ஈமா னில் மிக பலவீனமானதாகும்(முஸ்லிம்). இன்னும் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹுதைபா(ரலி)அவர்கள் கூறினார்கள் "எனது உயிர் எவன் கையிலிருக்கிறதோ அவன் மீது ஆணை யாக நிச்சயமாக நீங்கள் நன்மையை ஏவிக் கொண்டிருங்கள் தீமையைத் தடுத்துக் கொண்டிருங்கள். அவ்வாறு செய்யவில் லையானால் அல்லாஹ் நிச்சயமாக உங்களின் மீது அவனது வேதனையை விரைவில் இறக்கி வைப்பான். பிறகு நீங்கள் அவ னிடம் துஆச் செய்வீர்கள். உங்களுக்கு பதில் வழங்கப்படமாட் டாது (திர்மதி). ரசூல் (ஸல்) அவர் கள் சொல்ல நான் கேட் டுள்ளேனென அபூ பக்ர் சித்தீக் (ரலி) அவர்கள் கூறினார்கள்

"நிச்சயமாக மனிதர்கள் அநியாயக்காரனை அவனது இரு கைகளைப் பிடித்து நிறுத்தவில்லையானால் அல்லாஹ் தன்னிடமுள்ள வேதனையை பொதுவாக்கிவிடுகிறான் (அபூ தாவூத், திர்மதி, நஸாயீ).

**பயன்கள்:**

1—நன்மையை ஏவி, தீமையைத் தடுப்பது வெற்றிக்கு காரணமாக இருக்கிறது.
2—யார் தீமையைக் காணுகிறாரோ அவர் தனது சக்தியின் அளவிற்கு அதைத் தடுப்பது கட்டாயமாகும்.
3—கையால் தடுப்பதென்பது அதற்கு உரிமை பெறுபவனுக்காகும். உதாரணமாக தந்தை தன் வீட்டில் தடுப்பது அல்லது ஒரு அதிகாரி அல்லது அவனுக்கு பகரமாக உள்ளவன் தனது அதிகாரத்தின் கீழுள்ளவர்களைத் தடுத்து நிறுத்துவது போலாகும்.
4—உள்ளத்தால் தடுப்பதென்பது தீமையை வெறுப்பதும், அதிலிருந்து நீங்குவதும் கட்டாயமாகும்.
5—நன்மையை ஏவுவதையும், தீமையைத் தடுப்பதையும் விடுவது அல்லாஹ்வின் தண்டனைக்கு காரணமாக இருப்பது போல பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்படாமலிருப்பதற்கும் காரணமாக இருக்கிறது.

# 7—நன்மையை ஏவி,தீமையதைத் தடுப்பதற்குரிய ஒழுக்கங்கள்

அல்லாஹுத் தஆலா கூறுகிறான்: (நபியே) உமது இறைவனின் வழியில்(மக்களை)விவேகத்துடனும்,அழகிய உபதேசத்தைக் கொண்டும் நீர்அழைப்பீராக! எது மிக அழகானதோ அதைக் கொண்டு வாதம் புரிவீராக (16:125). மேலும் கூறுகிறான் :அல்லாஹ்வின் அருளின் காரணமாக (நபியே) நீர் அவர்களிடம் மென்மையாக நடந்து கொண்டீர் நீர் கடுகடுப்

**பானவராகவும்,கடின உள்ளமுடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உமது சமூகத்திலிருந்து ஓடிப் போயிருப்பார்கள் (3:159).**

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவன் காரியங்கள் அனைத்திலும் அவன் மென்மையையே விரும்புகிறான்.(புகாரி, முஸ்லிம்). மேலும் நபி (ஸல்) கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் :நிச்சயமாக மென்மையாக நடந்து கொள்ளக் கூடிய எல்லாக் காரியங்களும் அலங்காரமாக அமையும். அது இல்லாத எந்தக் காரியமும் குறைவானதாகவே இருக்கும் (முஸ்லிம்)நான் ரசூல் (ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டுள்ளேன் என ஜரீருப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள் :யார் மென்மையான தன்மையைத் தடுத்துக்கொண்டானோ அவன் நன்மை அனைத்தும் தடுக்கப்பட்டவனாகிவிட்டான் (முஸ்லிம்).

**பயன்கள்:**

1- மென்மையாக நடந்துகொள்வதின் மீது ஆர்வமூட்டுதல், அழைப்புப் பணியில் நுட்பத்தைப் பின்பற்றுதல். நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல்

# 8- பெற்றோருக்கு உபகாரம் செய்தல்

அல்லாஹ் கூறுகிறான்:மனிதன் தன் தாய்,தந்தையர்களுக்கு உபகாரம் செய்யவேண்டு மென நாம் உபதேசித்தோம்,, (29:8). மேலும் கூறினான்:அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் வணங்கக்கூடாதென்றும், பெற்றோருக்கு உபகாரம் செய்ய வேண்டுமெனவும் உமது இறைவன் விதித்துள்ளான். அவ் விருவரில் ஒருவரோ அல்லது இருவருமோ நிச்சயமாக உம் மிடம் முதுமையை அடைந்து விட்டால் அவ்விருவரிடத்

திலும் ச்சீ என்று நீர் கூறிவிடாதீர் இன்னும் அவ்விருவரிடமும் மரியாதையான சொல்லைச் சொல்லுவீராக! (17:23).மேலும் கூறினான்: மனிதன் தன் தாய், தந்தையர்களுக்கு(உபகாரம் செய்ய வேண்டுமென)நாம் உபதேசித்தோம். அவனின் தாய் அவனை பலஹீனத்தின் மேல் பலஹீனமாக(கர்ப்பத்தில்)சுமந்தாள்.இன்னும் அவனுடைய பால்குடி மறத்த(லி)ல் இரண்டு வருடங்கள் ஆகின்றன, நீ எனக்கும், உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்துவாயாக! (31:14).

அப்துல்லாஹிப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் கூறினார்கள் நான் ரசூல் (ஸல்) அவர்களிடம் செயல்களில் எது சிறந்ததெனக் கேட்டேன் :தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதெனக் கூறினார்கள்.பின்பு எதுவெனக் கேட்டேன் பெற்றோருக்கு உபகாரம் செய்வதெனக் கூறினார்கள் பின் எதுவெனக் கேட்டேன் அல்லாஹ்வின் பாதையில் போர்புரிவதெனக் கூறினார்கள். அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! நான் அழகிய முறையில் நட்புக் கொள்வதற்கு மனிதர்களில் மிகத் தகுதியானவர் யார்? எனக் கேட்டார், உனது தாயெனக் கூறினார்கள். பிறகு யார்? எனக் கேட்டார், உனது தாயெனக் கூறினார்கள். பிறகு யார்? எனக் கேட்டார், உனது தாயெனக் கூறினார்கள், பிறகு யார்? எனக் கேட்டார், உனது தந்தையுமெனக் கூறினார்கள்.

**பயன்கள்:**

1–இஸ்லாம் பெற்றோரைக் கண்ணியப்படுத்துகிறது. அவ்விருவருக்கும் கட்டுப்பட்டு நடக்கும்படியும். உபகாரம் செய்யும் படியும் ஏவுகிறது அவ்விருவருக்கும் உபகாரம் செய்வதின் மீது ஆர்வ மூட்டுகிறது.

2–தொழுகையை அதற்குரிய நேத்தில் நிறைவேற்றிய பின்னர் அல்லாஹ்விற்கு மிகப் பிரியமான செயல் பெற்றோருக்கு உபகாரம் செய்வதாகும்.

3–அவ்விருவருக்கும் நோவினை செய்வது, அவர்களிடம் கடின மாகப் பேசுவது, அவர்களிடம் சீயெனக் கூறுவது ஆகிய வற்றைப் பற்றி இஸ்லாம் கடுமையாக எச்சரிக்கிறது.

4–தாயின் அந்தஸ்து விளக்கப்பட்டுள்ளது. நிச்சயமாக வழிப்படு வதிலும், உபகாரம் செய்வதிலும் தந்தையை விட தாய் முன்னு ரிமை பெறுகிறார்.

# 9–நற் குணம்

அல்லாஹ் கூறுகிறான் :**அல்லாஹ்வின் அருளின் காரண மாகவே நீர் நயமாக நடந்து கொண்டீர். நீர் கடுகடுப்பான வராகவும், கடின உள்ளமுடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உமது சமூகத்தைவிட்டும் ஓடிப்போயிருப்பார்கள** (3:159). மேலும் கூறகிறான்:**(நபியே) நிச்சயமாக நீர் நற் குணத் தின் மீது இருக்கிறீர்**(68:4).

நிச்சயமாக ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக அபுத்தர்தா (ரலி) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் அடியானின் தராசில் அழகிய குணத்தைவிட கனமான வஸ்து வேறெதுவும் கிடை யாது. நிச்சயமாக அல்லாஹ் அருவருப்பான கெட்ட வார்த் தையை கோபம் கொள்கிறான். அபூ ஹுரைரா(ரலி)அவர்கள் கூறி னார்கள் மனிதர்களைச் சுவர்க்கத்தில் நுழைவிக்கக் கூடிய காரி யங்களில் மிக அதிகமானது எதுவென ரசூல்(ஸல்)அவர்களி டம் கேட்கப்பட்டது: நபி(ஸல்)அவர்கள் இறையச்சமும்,அழகிய குணமுமெனக் கூறினார்கள், மேலும் ரசூல்(ஸல்) அவர்கள் கூறி யதாக அபூஹுரைரா(ரலி)அவர்கள் கூறினார்கள் :முஃமின்க ளில் பூரணமான ஈமான் உடையவர்கள் அவர்களில் மிக அழகிய குணமுடையவராவர். உங்களில் சிறந்தவர் தங்களின் மனைவியரி டத்தில் சிறந்தவராவர். நான் ரசூல்(ஸல்)அவர்கள் கூறக்கேட்டுள் ளேன் என ஆயிஷா(ரலி)அவர்கள் கூறினார்கள் :நிச்சயமாக ஒரு முஃமின் அவனது அழகிய குணத்தால் பகலில் நோன்பு நோற்று,

இரவில் நின்று வணங்கியவனின் அந்தஸ்த்தை அடைந்து விடு கிறான்.

**பயன்கள்:**

1.ரசூல்(ஸல்)அவர்களின் அழகிய குணம் விவரிக்கப்பட்டுள்ளது.
2—அழகிய குணத்தின் சிறப்பும், அதன் அந்தஸ்தும் கூறப்பட் டுள்ளது. நற் குணம் நிச்சயமாக சுவர்க்கத்தில் நுழைவிக்கும் செயல்களில் அதிகமானதாகும். இது அந்தஸ்துக்களை உயர்த் தும். செயல்கள் மறுமையில் நிறுக்கப்டுவது விவரிக்கப்பட்டுள் ளது. முஸ்லிமின் தராசில் மிகக் கனமானது இறையச்சமும், அழகிய குணமுமாகும்.
3—அழகிய சொல், செயலின் மீது இஸ்லாம் ஆர்வமூட்டுகிறது. அதில் அறுவறுப்பானதை விட்டும் எச்சரிக்கை செய்கிறது.
4—கணவன்,மனைவிக்கிடையே உள்ள உறவின் முக்கியத்துவம்.
5—ஈமான் வணக்க, வழிபாடுகளால் அதிகரிக்கவும், பாவங்களால் குறையவும் செய்யும்.

## 10—மென்மையும் அமைதியும்

அல்லாஹுத் தஆலா கூறுகிறான்: (நபியே) உமது இறை வனின் வழியில்(மக்களை)விவேகத்துடனும்,அழகிய உபதேசத் தைக் கொண்டும் நீர்அழைப்பீராக! எது மிக அழகானதோ அதைக் கொண்டு வாதம் புரிவீராக (16:125). மேலும் கூறுகி றான் :அல்லாஹ்வின் அருளின் காரணமாக (நபியே) நீர் அவர் களிடம் மென்மையாக நடந்து கொண்டீர் நீர் கடுகடுப்பான வராகவும்,கடின உள்ளமுடையவராகவும் இருந்திருந்தால் அவர்கள் உமது சமூகத்திலிருந்து ஓடிப் போயிருப்பார்கள் (3:159).

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் மென்மையானவன் காரியங்கள் அனைத்திலும் அவன் மென்மையையே விரும்புகிறான்.(புகாரி,

முஸ்லிம்). அஷஜ்ஜு அப்துல் கைஸிடம் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்கள்: நநிச்சயமாக உம்மிடம் பொறுமை, அமைதி என்ற இரு பண்புகள் உள்ளன. அவ்விரண்டையும் அல்லாஹ் விரும்புகிறான். மேலும் நபி (ஸல்) கூறியதாக ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் :நிச்சயமாக மென்மையாக நடந்து கொள்ளக்கூடிய எல்லாக் காரியங்களும் அலங்காரமாக அமையும். அது இல்லாத எந்தக் காரியமும் குறைவானதாகவே இருக்கும் (முஸ்லிம்).நான் ரசூல் (ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டுள்ளேன் என ஜரீருப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள் :யார் மென்மையான தன்மையைத் தடுத்துக்கொண்டானோ அவன் நன்மை அனைத்தும் தடுக்கப்பட்டவனாகிவிட்டான் (முஸ்லிம்).

**பயன்கள்:**

1.அல்லாஹ் மென்மையை விரும்புகிறான்.நிச்சயமாக மென்மையாக நடந்து கொள்வது நன்மையை ஏற்படுத்தும்.
2.நிச்சயமாக மக்களிடத்தில் கொடுக்கல், வாங்கல் செய்வதில் மென்மையாக நடந்து கொள்வது சுவர்க்க வாசிகளின் பண்பாடாகும்.

# 11–அருள்

அல்லாஹ் நபி (ஸல்) அவர்கள் பற்றிக் கூறுகிறான் :மு.:.மின்களிடம் மிகக் கருணையுடையவராகவும் கிருபை உடையவராகவும் இருக்கிறார்(9:128). மேலும் மு.:.மின்கள் பற்றிக் கூறுகிறான்: தங்களுக்கிடையே கிருபையுள்ளவர்களாக இருப்பார்கள்(48:29).

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக ஜரீர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: மனிதர்களுக்குக் கிருபை காட்டாதவனுக்கு அல்லாஹ் கிருபை செய்யமாட்டான்.(புகாரி, முஸ்லிம்).

உண்மையாளரும், உண்மைப்படுத்தப்பட்டவருமான அபுல்காசிம் நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேள்விபட்டுள்ளேன் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: யார் துாபாக்கியமுடையவனோ அவனிடமிருந்துதான் அருள் அகற்றப்படும். (அஹ்மது, திர்மதி).

**பயன்கள்:**

1– கிருபை காட்டுதல் மு.:.மின்களின் தன்மையில் உள்ளது.
2– மனிதர்கள், மனிதர்களுக்குக் கிருபை காட்டுவதென்பது அல்லாஹ்வின் கிருபையில் நுழைவிக்கும் காரணங்களிலுள்ளதாகும்.
3– ஒரு மனிதனின் உள்ளத்திலிருந்து கிருபை அகற்றப்பட்டு விடுவது அவன் துர்பாக்கிக்கியமுடையவன் எனபதற்கு அடையாளமாகும்.

# 12– அநியாயம் செய்யாதீர்.

அல்லாஹ் கூறுகிறான்: அநியாயக்காரர்களுக்கு (மறுமை நாளில்) நெருங்கிய இரக்கம் காட்டும் நண்பனோ, ஏற்றுக் கொள்ளப்படும் சிபாரிசு செய்பவனோ இருக்க மாட்டான்(40:18).

அல்லாஹ்வின் மூலம் நபி (ஸல்) அறிவிப்பதாக அபூதர் (ரலி) அவர் கள் கூறினார்கள்: எனது அடியார்களே நிச்சயமாக நான் என் மீது அநியாயத்தை ஹராமாக்கிவிட்டேன்.அதை உங்களுக்கிடையிலும் ஹராமாக்கிவிட்டேன். எனவே நீங்கள் (ஒருவருக்கொருவர்) அநியாயம் செய்யாதீர்கள் (முஸ்லிம்). நிச்சயமாக ரசூல்(ஸல்) அவர்கள் கூறியதாக ஜாபிர்(ரலி)அவர்கள் கூறினார்கள்: அநியாயம் செய்வதைப் பயந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அநியாயம் மறுமை நாளின் இருள்களாகும். மஆதுப்னு ஜபல் (ரலி)அவர்களை நபி (ஸல்) அவர்கள் யமனுக்கு அனுப்பியபோது ரசூல் (ஸல்)அவர்கள் கூறியதாக மஆத்(ரலி) கூறினார்கள் :அநீதம் இழைக்கப்பட்டவனின் துஆவை நீ

பயந்துகொள். நிச்சயமாக அந்தத் துஆவிற்கும், அல்லாஹ் விற்குமிடையே எவ்வித திரையுமில்லை(புகாரி,முஸலிம்). நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: யாரேனும் ஒருவன் தனது சகோதரனை மானபங் கப்படுத்தியிருந்தால் அல்லது அவனது பொருள்களில் எதையே னும் ஒன்றை அநீதமாக எடுத்திருந்தால் தீனாரும் திர்ஹமுமில் லாமல் போவதற்கு (அதாவது மறுமை நாள் வருவ தற்கு)முன்னால் அதை அவன் கொடுத்துக் கொள்ளட்டும், அவனிடம் நல்ல செயலிருந்தால் அவன் செய்த அநியா யமளவிற்கு எடுக்கப்படும். அவனிடம் நன்மைகள் இல்லை யெனில் அநீதமிழைக்கப்பட்டவனின் தீமைகள் இவன் மீது சுமத்தப்படும் (புகாரி).

**பயன்கள்**

1−அநீதமிழைப்பது ஹராமாக்கபட்டுள்ளது.
2−அநியாயம் செய்தவனுக்கு இம்மையிலும், மறுமையிலும் கடும் தண்டனை.
3−அநியாயம் செய்தவனுக்கு பாதகமாக அநியாயம் இழைக்கப் பட்டவன் செய்யும் துஆ ஏற்றுக்கொள்ளப்படும்.

# 13.முஸ்லிமின் உயிருக்கு உத்தரவாதம்

அல்லாஹ் கூறுகிறான்: யாரேனும் ஒரு மு:மினை வேணுமென்றே கொலை செய்து விட்டால் அவனுக்கு தண்டனை நரகமே, அவன் அதில் நிரந்தரமாக இருப்பான். அல்லாஹ் அவன் மீது கோபம் கொள்கிறான்.இன்னும் அவனை சபிக்கிறான். மேலும் அவனுக்குக் கடும் தண்ட னையைத் தயாரித்து வைத்துள்ளான்(4:93).

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹிப்னு மஸ் வூத் (ரலி)அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் மனிதர்களுக்

கிடையே செய்யப்படும் முதல் தீர்ப்பு இரத்தங்கள்(கொலை, காயங்கள்)பற்றியதாகும். ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அப் துல்லாஹ் இப்னு அம்ரு(ரலி)அவர்கள் கூறினார்கள்: உலகம் அழிந்துபோவது ஒரு முஸ்லிம் கொல்லப்படுவதைவிட அல்லாஹ்விடத்தில் மிக அற்பமானதாகும்.

**பயன்கள்**

1–ஒரு முஸ்லிம் கொலை செய்யப்படுவது பற்றி எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது. மு.ஃமினுக்கு அல்லாஹ்விடத்தலுள்ள கண் ணியம் விவரிக்கப்பட்டுள்ளது.

2–மறுமை நாளில் முதலில் தீர்ப்புச் செய்யப்டுவது இரத்தங்கள் பற்றியாகும் ஏனெனில் அது மிகப்பெரிய பாவமாகும்.

3–கொலைக்கு உலகில் தண்டனை கொலையே. மறுமையில் நிரந்தர நரகம்.

# 14.அண்டை வீட்டாருக்குச் செய்ய வேண்டிய கடமை

அல்லாஹ் கூறுகிறான்:அல்லாஹ்வை வணங்குங்கள் அவ னுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். தாய்,தந்தையர்க ளுக்கும்,நெருங்கிய உறவினர்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், அண்டை வீட்டிலுள்ள உறவினருக்கும், அருகிலுள்ள அண்டை வீட்டாருக்கும் (பிரயாணம்,தொழில் போன்றவற்றில்) நட்பு உடையவர்களுக்கும், வழிப்போக்கர்க ளுக்கும் உபகாரம் செய்யுங்கள்(4:36).

நிச்சயமாக ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் மு.ஃமினாகமாட்டான், அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் மு.ஃமினாகமாட்டான், அல்லாஹ்வின் மீது ஆணையாக அவன் மு.ஃமினாகமாட்டான். அல்லாஹ்வின் தூதரே! யாரவன்? எனக் கேட்கப்பட்டது, அண்டைவீட்டான் எவனது

கெடுதிகளைப் பயந்து கொண்டிருக்கிறானோ அவன்தான் எனக் கூறினார்கள். நிச்சயமாக நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: எவர் அல்லாஹ்வையும் இறுதி நாளை யும் நம்புகிறாரோ அவர் தனது அண்டை வீட்டா ருக்கு தொல்லை கொடுக்க வேண்டாம். எவர் அல்லாஹ்வை யும், மறு மையையும் நம்புகிறரோ அவர் தனது விருந்தினருக்கு மரி யாதை செய்யட்டும். எவர் அல்லாஹ்வையும், மறுமையையும் நம்புகிறாரோ அவர் நல்லதையே சொல்லட்டும் அல்லது மௌன மாக இருந்து கொள்ளட்டும்.

**பயன்கள்**

1– அண்டை வீட்டாருக்கு உபகாரம் செய்வதற்கும், அவர் களுக்குத் தொல்லை கொடுக்காமலிருப்பதற் கும் உறுதியாக ஆர்வமூட்டப்பட்டுள்ளது.
2– அண்டை வீட்டார் முஸ்லிமல்லாதவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு உபகாரம் செய்வதும்,தொல்லை கொடுக்காமலி ருப்பதும் பூரணமான ஈமான் உள்ளவனென்பதற்கு அர்த்தமாகும்.

# 15– நாவின் விபத்து

அல்லாஹ் கூறுகிறான்: **கண்காணித்து எழுதக் கூடிய (மலக்கு)அவனிடமிருந்தே தவிர அவன் எந்தச் சொல்லையும் மொழிவதில்லை(50:18).** மேலும் கூறுகிறான்: **எதைப் பற்றிய ஞானம் உனக்கில்லையோ அதைச்(செய்யத்)தொடர வேண் டாம்.நிச்சயமாக செவிப்புலனும்,பார்வையும், உள்ளமும் இவை ஒவ்வொன்று பற்றியும்(மறுமையில்)கேள்விகேட்கப்படும்(17:36).**

அபூ மூஸல் அஷ்அரி (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் தூதரே! முஸ்லிம்களில் யார்? சிறந்தவரென நான் கேட்டேன்: யாருடைய நாவு,கையிலிருந்து பிற முஸ்லிம்கள்

ஈடேற்றம் அடைகிறார்களோ அவர்தான் சிறந்தவரென நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக ஸஹ்ல் இப்னு ஸஃது (ரலி)அவர்கள் கூறினார்கள்: யார் இரு தாடைகளுக்கும், இரு தொடைகளுக்குமிடையே உள்ளவற்றிற் குப் பொறுப்பேற்றுக் கொள்கிறாரோ அவருக்கு நான் சுவர்கத்தைக் கொண்டுப் பொறுப் பேற்றுக்கொள்கிறேன். நபி (ஸல்) அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார் கள்:ஒரு அடியான் நல்லதா கெட்டதா என சிந்திக்காமல் ஒரு வார்த்தையைப் பேசிவிடுகி றான்,அதன் காரணமாக நிச்சயமாக அவன் மேற்கிற்கும், கிழக் கிற்குமிடையேயுள்ள தூரத்தை விட மிக தூரமாக நரகத்தில் விழுந்து விடுகிறான்.

**பயன்கள்**

1–நாவின் விபத்தும், அதைத் தற்காத்துக் கொள்வதின் அவசியமும் விவரிக்கப்பட்டுள்ளன, அல்லாஹ்விற்கு மாறான வழிகளில் ஒருவன் தனது நாவை பயன் படுத்துவது நரகத் தில் நுழைவதற்குறிய காரணங்களில் ஒன்றாக இருப்பது போல நிச்சயமாக அவன் முக்கியமாகக் கருதாமல் சொல்கிற ஒரு வார்த்தையால் நரகத் தில் விழுந்து விடுகிறான். அதைப் பாதுகாத்துக் கொள்வது சுவர்க்கம் புகும் காரணங்களிலுள்ள தாகும். மனிதர்களுக்கு அதிகமான மறதியும்,கவனக் குறைவும் பயனற்ற பேச்சுக்களில் தங்களின் நாக்குகளைப் பயன் படுத்துவ தால் ஏற்படுகின்றன.

2–நிச்சயமாக மனிதன் அவனது சொற்,செயல்களின் மீது கேள்வி, கணக்குக் கேட்கப்படுவான்.நிச்சயமாக புலன்களில் மிக விபத் திற்குரியது நாவும், மறும உருப்புமாகும்.

## 16.புறம் பேசுவது ஹராம்

அல்லாஹ் கூறுகிறான்: உங்களில் சிலர் சிலரைப் புறம் பேச வேண்டாம் உங்களில் எவரேனும் ஒருவர் இறந்து விட்ட

தனது சகோதரனின் மாமிசத்தை உண்ண விரும்புவாரா? (விரும்பமாட்டார்)அதை நீங்கள் வெறுப்பீர்கள்(49:12).

நிச்சயமாக ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைர (ரலி) அவர்கள் கூறினார்கள்: புறம் பேசுதல் என்னவென நீங்கள் அறிவீர்களா? அதற்கவர் அல்லாஹ்வும்,அவனது தூதருமே அறிந்தவர்களெனக் கூறினார், நபி (ஸல்) அவர்கள் உனது சகோதரன் எதை வெறுக்கிறானோ அதை நீ கூறுவதுதான் எனக் கூறினார்கள். நான் கூறுவது எனது சகோதரனிலிருந்தால் அது பற்றி என்ன எண்ணுகிறீர்களெனக் கேட்க்கப்பட்டது? நீ கூறுவது அவனிடமிருந்தால் நிச்சயமாக அவனை நீ புறம் பேசி விட்டாய். நீ கூறியது அவனிடம் இல்லையென்றால் நீ அவனை அவதூறு கூறிவிட்டாய் என்று கூறினார்கள்.ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள் :நான் நபி (ஸல்) அவர்களிடம் ஸ:.பிய்யா இவ்வாறு இவ்வாறு இருப்பதே உங்களுக்குபோதும் அதாவது அவர்கள் குட்டையாக இருப்பதை எண்ணிக் கூறினேன். அதற்கு (ஸல்) அவர்கள் நிச்சயமாக நீ ஒரு வார்த்தை கூறி விட்டாய் அதைக் கடலில் கலக்கினால் அதனுடன் கலந்து அதைக் கலங்கலாக்கிவிடும் எனக் கூறினார்கள். நிச்சயமாக ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: முஸ்லிம்கள் அனைவரின் மீதும் ஒரு முஸ்லிமின் இரத்தம் அவனது மானம்,அவனது பொருள் யாவும் கண்ணியமானதாகும். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வையும், மறுமையையும் யார் நம்புகிறாரோ அவர் நல்லதைச் சொல்லட்டும் அல்லது மௌனமாக இருக்கட்டும். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூதர் (ரலி) அவர்கள் கூறினார்கள்:யார் தனது சகோதரன் மானபங்கப்படுத்தப்படுவதைத் தடுத்துவிடுகிறாரோ அவரின் முகத்தை விட்டும் மறுமையில் அல்லாஹ் நரகத்தைத் தடுத்து விடுகிறான்.

**பயன்கள்**

1–புறம் பேசுவது ஹராம், அது பெரும் பாவங்களைச் சார்ந்தது, புறம் பேசியவனுக்கு கடும் தண்டனை.

2–ஒருவன் வெறுக்கும் காரியம் அவனிடமிருந்தாலும் அவனில் லாத போது அதைக் கூறுவது ஹராம்.
3–புறம் பேசுபவனை வெறுப்பதும், அதைவிட்டும் அவனைத் தடுப்பதும் அவசியமாகும். புறம் பேசுவதைக் கேட்பதும் ஹராம். முஸ்லிம் மானபங்கப்படுவதைத் தடுப்பது சிறப்பான தாகும். மறுமையில் அப்படித் தடுத்தவனின் முகத்தை விட்டும் நரகம் தடுக்கப்படுகிறது.(அதாவது அவனை நரகத்தை விட்டும் பாதுகாக்கப்படும்).
4–நிச்சயமாக புறம் பேசுவதென்பது மனிதன் எதை வெறுக்கி றானோ அதை சொல்வதாலும்,ஜாடை செய்வதாலும் ஏற்படு கிறது.

# 17. உண்மை சிறப்பானது பொய் இகழுக்குரியது

அல்லாஹ் கூறுகிறான்: நிச்சயமாக பொய்யை இட்டுக் கட்டுவதெல்லாம் அல்லாஹ்வின் வசனங்களை நம்பாதவர்கள் தான், மேலும் அவர்கள் தான் பொய்யர்கள்(16:105).மேலும் கூறுகிறான்: மு.்.மின்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங் கள் மேலும் நீங்கள் உண்மையாளர்களுடன் இருங்கள்(9:119). மேலும் கூறுகிறான்: அவர்கள் அல்லாஹ்விடம் உண்மையாக நடந்திருப்பார்களானால் அது அவர்களுக்குச் சிறந்ததாக இருந்திருக்கும் (47:21).

ஹஸனுப்னு அலி (ரலி) அவர்கள் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூறினார்கள்: உனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தக் கூடியதை உனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தாததின் பக்கம் விட்டு விடு. ஏனெனில் உண்மை நிம்மதியாகவும், பொய் கலக்கமாகவும் இருக்கிறது (திர்மதி).ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அப் துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)அவர்கள் கூறினார்கள் நிச்சயமாக உண்மை நன்மையினளவில் வழி காட்டக் கூடியதாகவும் நிச்சய

மாக அந்த நன்மைச் சுவர்க்கத்தின் பால் வழி காட்டக் கூடிய தாகவுமிருக்கிறது. நிச்சயமாக ஒரு மனிதன் உண்மையைச் சொல்கிறான், அவன் உண்மையே சொல்ல முயற்சிக்கிறான், இறுதியில் அல்லாஹ்விடம் அவன் மிக்க உண்மையாளன் என்று எழுதப்படுகிறான். நிச்சயமாக பொய் பாவத்தின் பால் வழி காட்டுகிறது, நிச்சயமாக அப்பாவம் நரகின் பால் வழி காட்டு கிறது. நிச்சயமாக ஒரு மனிதன் பொய் சொல்கிறான், அவன் பொய் சொல்லவே முயற்சிக்கிறான், இறுதியில் மிகப் பெரும் பொய்யனென அல்லாஹ்விடம் எழுதப்படுகிறான்.நபி (ஸல்) அவர் கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: நான்கு காரியங்கள் எவனிடமுள்ளதோ அவன் கலப் பற்ற நயவஞ்சகன் அவற்றில் ஏதேனும் ஒன்று அவனிடத்திலி ருந்தால் அதை அவன் விடும் வரை நயவஞ்சகத்தின் அத் தன்மை அவனிடத்திலிருக்கும். அவை: அவன் நம்பப்பட்டால் நம்பிக்கைத் துரோகம் செய்வான்,பேசினால் பொய்யுரைப்பான், உடன் படிக்கை செய்தால் அதை முறித்து விடுவான், விவாதித் தால் பாவம் செய்வான்.

## பயன்கள்

1– பொய் சொல்வது பற்றிய எச்சரிக்கை. நிச்சயமாக அது நயவஞ்சகர்களின் தன்மைகளிலுள்ளது. மக்களிடையே பொய்யைப் பரப்புபவன் கடின தண்டனைக்குரியவன்.

2– நிச்சயமாக பொய் நரகத்தில் நுழைவதற்குரிய காரணங்களி லுள்ளதாகயிருப்பது போல அது பாவத்தின் பால் இழுத்துச் செல்லக்கூடியதாகவும் இருக்கிறது.

2– உண்மையின் சிறப்பு விவரிக்கப்பட்டுள்ளது.மேலும் எல்லாக் காரியங்களிலும் அதன் மீது ஆர்வமூட்டப்பட்டுள்ளது.

4– நிச்சயமாக பொய் நயவஞ்சகத்தின் அடையாளங்களில் ஒரு அடையாளமாகும்.

# 18. தவ்பா (பாவ மீட்சி பெறுதல்)

அல்லாஹ் கூறுகிறான்: மு:.மின்களே! நீங்கள் அனைவரும் வெற்றி பெறுவதற்காக அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோருங்கள்(24:31).மேலும் கூறுகிறான்: ஈமான் கொண்டவர்களே! தூய்மையான நிலையில் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கேளுங்கள் (66:8).

அகர்ருப்னுல் யஸார் (ரலி) அவர்கள் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூறினார்கள்: மனிதர்களே அல்லாஹ்விடம் பாவ மீட்சி பெறுங்கள் அவனிடமே பாவ மன்னிப்புத் தேடுங்கள். நிச்சயமாக நான் ஒவ்வொரு நாளும் நூறுமுறை பாவ மன்னிப்புத் தேடுகிறேன். ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவன் தனது ஒட்டகத்தைக் காட்டு வனாந்திரத்தில் தவறவிட்டுவிட்டான் பின்னர் அதனைத் (தேடி)க் கண்டுபிடித்துவிட்டான், அந்நிலையில் அவன் அடைகின்ற மகிழ்ச்சியைவிட அதிக அளவிற்கு ஒரு அடியான் பாவ மன்னிப்புக் கோரும்போது இறைவன் மகிழ்ச்சி அடைகிறான். ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரலி) அவர்கள் கூறினார் கள்:ஆதமுடைய மக்கள் அனைவரும் தவறு செய்யக்கூடியவர் களே. தவறு செய்யக்கூடியவர்களில் மிகச் சிறந்தவர்கள் பாவ மன்னிப்புத் தேடுபவர்களே. ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக உமர் இப்னுல்கத்தாப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: அடியான் கர்,கர் என இழுக்கும் நிலையை அடையாமலிருக்கும் வரை நிச்சயமாக அல்லாஹ் அவனது தவ்பாவை ஏற்றுக் கொள்கிறான். (கர்,கர் நிலையை அடைவதென்பது உயிர் தொண்டைக் குழியை அடைவதாகும்). நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ மூஸல் அஷ்அரி (ரலி) அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக பகலில் பாவம் செய்தவன் மன்னிப்புக் கேட்பதற்காக அல்லாஹ் இரவில் தன் கையை விரித்து வைக்கிறான். இரவில் பாவம் செய்தவன் மன்னிப்புக் கோருவதற்காக

பகலில் தன் கையை விரித்து வைக்கிறான் இது சூரியன் மேற்கில் உதிக்கும் வரையாகும் .

**பயன்கள்**

1-எல்லா நேரத்திலும் தவ்பாச் செய்வது கட்டாயமாகும். தவ்பாச் செய்வது அடியார்களின் வெற்றிக்கும், ஈடேற்றத்திற்கும் காரணமாக இருப்பது போல எவ்வளவு பெரிய பாவமாகயிருந்தாலும் தவ்பாச் செய்வது கூடும்.

2-அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புத் தேடுவது சிறந்தது. நிச்சயமாக அல்லாஹ் தவ்பாச் செய்பவனைப் பற்றி சந்தோஷம் கொள்கிறான். அல்லாஹ்வின் அருளும்,உபகாரமும் விசாலமானது.

3-தவறு செய்வது ஆதமின் மகனுக்கு இயற்கையானதாகும். எனினும் பாவங்களுக்காக மன்னிப்புத் தேடுவது அவனுக்குக் கட்டாயமாகும்.

**தவ்பாவின் நிபந்தனைகளும் அதன் சில சட்டங்களும்**

1-உயிர் தொண்டைக் குழியை அடைந்து, மரணம் வருவதற்கு முன் தவ்பாச் செய்வது.

2-சூரியன் மேற்கிலிருந்து புறப்படுமுன் தவ்பாச் செய்வது. அப்படிப் புறப்பட்டுவிட்டால் தவ்பாச் செய்வது பயனளிக்காது.

3-ஒருவன் பாவத்தைவிட்டும் உண்மையாகவே தவ்பாச் செய்த பின் அந்தப் பாவத்தை மீண்டும் செய்தால் நிச்சயாமாக அவனது முந்திய தவ்பா ஏற்றுக் கொள்ளப்படும். எனினும் மீண்டும் செய்த பாவத்திலிருந்து மீண்டும் ஒரு முறை தவ்பாச் செய்வது அவசியமாகும்.

4-பாவத்தை விடுவது சென்று விட்ட பாவத்தின் மீது வருந்துவது, அதை மீண்டும் செய்யாமலிருக்க உறுதி கொள்வது.

# 19 ஸலாம் சொல்லுதல்

அல்லாஹ் கூறுகிறான்: ஈமான் கொண்டவர்களே! உங்கள் வீடுகளல்லாத வேறு வீடுகளில் அவ்வீட்டிலுள்ளவர்களிடம் அனுமதி பெற்று, அவர்களிடம் ஸலாம் சொல்லாத வரை நுழையாதீர்கள் (24:27).

ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் ஈமான் கொள்ளாதவரை சுவர்க்கம் செல்ல முடியாது நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்காத வரை மு∴மின்களாக முடியாது நான் ஒரு காரியத்தை அறிவித்துத் தரட்டுமா? அதை நீங்கள் செய்வீர்களானால் ஒருவரை ஒருவர் நேசம் கொண்டவர்களாகிவிடுவீர்கள்.உங்களுக்கிடையே ஸலாம் சொல்வதைப் பரப்பிக் கொள்ளுங்கள் (முஸ்லிம்).நான் நபி (ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டுள்ளேனென அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள் கூறினார்கள்: மனிதர்களே ஸலாம் சொல் வதைப் பரப்பிக் கொள்ளுங்கள்,உணவு வழங்குங்கள்,சொந்த பந் தத்தை அணைத்து வாழுங்கள்,மக்கள் நித்திரையிலிருக்கும் போது இரவில் தொழுங்கள் சுகமாக சுவர்க்கம் செல்வீர்கள். நிச்சயமாக ரசூல் (ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் ஒரு சபைக்குச் சென்றால் ஸலாம் சொல்லிக் கொள்ளட்டும். அங்கு உட்கார வேண்டுமெனத் தோன்றினால் அவர் அங்கு உட்கார்ந்து கொள் ளட்டும், பிறகு எழுந்து செல்லும் போது ஸலாம் சொல்லிக் கொள்ளட்டும். முந்தியது பிந்தியதை விட மிகத் தகுதிவாய்ந்த தாக இல்லை.

## சில சட்டங்கள் :

1–ஸலாம் சொல்வது சிறந்தது. நிச்சயமாக இது சுவர்கத்தில் நுழைவதற்குக் காரணமான அன்பிற்குக் காரணமாக உள்ளது.

2–ஸலாமை அறிந்தவர்களுக்கும் அறியாதவர்களுக்கும் சொல் வது விரும்பத்தக்கதாகும். நிச்சயமாக ஸலாம் சொல்வது அறிந்தவர்களுக்கு மட்டுமல்ல.

3−சுன்னத்தான ஸலாமிற்குரிய வார்த்தை அஸ்ஸலாமு அலைக்கும் என்பதாகும் வரஹ்மத்துல்லாஹ் என அதிகப்படுத்தினால் சிறந்ததாகும். வரஹ்மத்துல்லாஹி வபரகாதுஹு என அதிகப் படுத்தினால் மிகச்சிறந்ததாகும். ஸலாம் கூறியவருக்கு அவர் கூறியது போன்று பதிலளிப்பது கட்டாயமாகும்.அதைவிட அதிகமாகக் கூறுவது விரும்பத்தக்கதாகும்.
4−கா∴பிர்களுக்கு நாமாக முந்திக் கொண்டு ஸலாம் சொல்வது ஹராமாகும். அவர்களாக நமக்கு ஸலாம் கூறினால் நாம் வஅலைக்கும் எனக் கூறவேண்டும்.
5−ஒரு சபையில் முஸ்லிம்களும், கா∴பிர்களும் இருந்தால் அவர் களுக்கு ஸலாம் சொல்வது கூடும்
6−இரு முஸ்லிம்கள் பிரிந்து சிறு இடைவெளிக்குப் பின் சந்தித் தாலும் ஸலாம் சொல்லிக் கொள்வது விரும்பத்தக்கதாகும்.
7−வீடுகளில் அதன் உரிமையாளர்களின் அனுமதியின்றி நுழை வது விலக்கப்பட்ட காரியமாகும் .

# 20.சாப்பாட்டின் ஒழுக்கங்கள்

ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்: உங்களிலொருவர் சாப்பிடும் போது பிஸ்மில்லாஹ் சொல்லிக் கொள்ளவேண்டும். ஆரம்பத்தில் மறந்து விட்டால் (நினைவு வந்ததும்) பிஸ்மில்லாஹி ∴பீ அவ்வலிஹி வஆகிரிஹி எனக் கூறிக் கொள்ளவேண்டும்.(பொருள் :இதன் ஆரம்பத்திற் கும், கடைசிக்கும் பிஸ்மில்லாஹ் சொல்லிக் கொள்கிறேன்)

ரசூல்(ஸல்)அவர்கள் என்னிடம் கூறினார்களென உமர் இப்னு அபூஸலமா(ரலி)அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் பெயர் கூறிக் கொள், உனது வலக்கரத்தால் சாப்பிடு, உனக்கருகிலி ருப்பதிலிருந்து சாப்பிட்டுக் கொள். நிச்சயமாக ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர் கள் கூறினார்கள்:உங்களில் எவரும் தனது இடது கையால் சாப்பிடவும், குடிக்கவும் வேண்டாம், ஏனெனில் நிச்சயமா

ஷைத்தான் இடது கையாலேயே உண்ணவும், குடிக்கவும் செய்கிறான். ரசூல் (ஸல்)அவர்கள் எந்த உணவையும் குறை கூறியதில்லை. அவர்கள் விரும்பினால் உண்பார்கள் அதை அவர்கள் விரும்ப வில்லையானால்(உண்ணாமல்)விட்டு விடு வார்கள், எனஅபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

**பயன்கள்:**

1–சாப்பிடும் போது பிஸ்மில்லாஹ் கூறுவது விரும்பத்தக்கதா கும். நிச்சயமாக பிஸ்மில்லாஹ்வை யாரேனும் மறந்துவிட்டால் நினைவு வருகிறபோது பிஸ்மில்லாஹி ஃபீ அவ்வலிஹி,வஆகி ரிஹி எனக் கூறிக்கொள்ளவேண்டும்.

2–இடது கையால் சாப்பிடக் கூடாது. நிச்சயமாக அது ஷைத் தானுக்கு ஒப்பாவதாகும். எனினும் நிர்ப்பந்தமுள்ளவன் இடது கையால் சாப்பிட்டுக் கொள்ளலாம் .

3–உணவைக் குறை கூறாமலிருப்பது சுன்னத்தாகும். எனினும் அவன் விரும்பினால் உண்ணலாம், இல்லையெனில் உண்ணா மல் விட்டுவிடலாம். அதுபற்றி தெரியப்படுத்துவதற்காக அதன் குறையைக் கூறலாம்.

# 21. மலம் ஜலம் கழித்தல்

நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் செல்வதாக இருந் தால் அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மினல் குப்ஃதி, வல்க பாஃயிதி எனக் கூறுவார்கள்: என அனஸ் (ரலி) அவர்கள் கூறு கிறார்கள்.(பொருள்:இறைவா! நிச்சயமாக நான் ஆண்,பெண் ஷைத்தான்களின் தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடு கிறேன்). ரசூல் (ஸல்) அவர்கள் மல,ஜலம் கழித்துவிட்டு வெளியே வரும்போது, குப்ஃரானக : எனக்கூறுபவர்களாக இருந்தார்கள்.

(பொருள்:இறைவா உன்னிடம் பாவமன்னிப்புத் தேடுகிறேன்). நிச்சயமாக ரசூல் (ஸல்)அவர்கள் தேங்கிக்கிடக்கும் தண்ணீரில்

சிறுநீர் கழிப்பதைத் தடைசெய்துள்ளார்கள்,என ஜாபிருப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

**பயன்கள்:**

1– ஒரு முஸ்லிம் கழிப்பிடம் செல்லும் போது அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மினல் குப்தி,வல் கபாயிதி எனவும் வெளியே வரும்போது கு.:ப்ரானக எனவும் கூறுவது விரும் பத்தக்கதாகும்.

2–மக்களை விட்டும் மறைவிடங்களை மறைத்துக் கொள்வது அவசியமாகும். கட்டிடங்களுக்கு வெளியே மல,ஜலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்காமலும், பின்னோக்காமலும் இருப்பதின் மீது ஆர்வம் கொள்வது கட்டாயமாக இருப்பது போல மல,ஜலம் கழிக்கும்போது மக்களை விட்டும் தூரமாகி மறைந்திருப்பது விரும்பத்தக்கதாகும்.

3–மல,ஜலம் கழிப்பதில் கவனமாக இருப்பதில் அக்கறை கொள்வதும்,அவ்விரண்டிற்குப்பின் துப்பரவு செய்வதும் அவசி யமாகும்.

4–இஸ்லாமிய மார்க்கம் மல,ஜலம் கழிக்கும் ஒழுக்கம் உள்பட அனைத்துக் காரியங்களையும் உள்ளடக்கி விளக்கியிருப்பதை கவனிக்குமிடத்து பூரணமான மார்க்கம் என்பது விளக்கப்பட் டுள்ளது.

# 22. நாய் வளர்த்தல்

ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: யாரேனும் ஒருவன் கால் நடை அல்லது வேட்டை அல்லது விவசாயம் இவை அல்லாததற்காக நாயை வளர்த்தால் ஒவ்வொரு நாளும் அவனது கூலியில் ஒருகீராத்துக் குறைந்து விடும்,,கீராத்தென்பது ஒரு மலையளவாகும். நிச்சய மாக ரசூல்(ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைரா(ரலி)அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவரின் பாத்திரத்தில் நாய் தனது நாக்கை நீட்டி தண்ணீர் குடித்து விட்டால் அதை நீங்கள்

ஏழு முறை கழுவிக் கொள்ளுங்கள். எட்டாவது முறை மண்ணைக் கொண்டு பூர்த்தியாக்கிக்கொள்ளுங்கள்.

**பயன்கள்**

1–வேட்டை,கால்நடையைப் பாதுகாத்தல், விவசாயம் இவைகளல்லாததற்காக நாய் வளர்ப்பது ஹராம்.

2–நாய்களை விட்டும் வெருண்டோடுவதையும், அவைகளைத் தவிர்ந்திருப்பதையும் ஏவப்பட்டுள்ளது.

3–நாய் நாக்கைப் போட்டுவிட்ட பாத்திரத்தை ஏழு முறை கழுவி எட்டாவது முறை மண்ணைக் கொண்டு கழுவப்பட வேண்டுமெனக் கூறப்பட்டதால் அது நஜூஸ் என கடுமையாக வலியுறுத்தப்பட்டுள்ளது.

# 23. திக்ருல்லாஹ் (இறைத் தியானம்)

அல்லாஹ் கூறுகிறான்: **நீங்கள் வெற்றி** பெறுவதற்காக **அல்லாஹ்வை அதிகம் திக்ரு** செய்யுங்கள்(62:10). மேலும் கூறுகிறான்: ஈமான் **கொண்டவர்களே! அல்லாஹ்வை அதிகமாக நினையுங்கள் காலையிலும், மாலையிலும் அவனைத் துதித்துக் கொண்டிருங்கள்**(33:41).

நபி(ஸல்)அவர்கள் கூறியதாக அபூமூஸல் அஷ்அரிய்யி (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: தனது ரப்பைத் துதித்துக் கொண்டிருப்பவனுக்கும் அவனை துதிக்காமலிருப்பவனுக்கும் உதாரணம் உயிருள்ளவனும், உயிரற்றவனும் போன்றாகும். ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் :நாவுக்கு இலேசான, தராசுக்குக் கனமான, ரஹ்மானுக்குப் பிரியமான இரு வார்த்தைகள் சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அளீம் என்பதாகும். ரசூல் (ஸல்) அவர்கள் கூறி யதாக அபூஹுரைரா (ரலி) கூறினார்கள்: சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்

லாஹு வல்லாஹு அக்பர் என நான் கூறுவது சூரியன் எவற்றின் மீதெல்லாம் உதிக்கின்றதோ அவற்றையெல்லாம் விட எனக்குப் பிரியமானதாகும். ரசூல் (ஸல்) அவர்கள் கூறுவதாக நான் கேட்டுள்ளேன் என ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: திக்ரில் மிகச் சிறந்தது லாஇலாஹ இல்லல்லாஹ் என்பதாகும்.

# 24. தும்மல், கொட்டாவி

நபி (ஸல்)அவர்கள் கூறியதாக அபூஹுரைரா(ரலி) அவர் கள் கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் தும்மலை விரும்புகி றான், கொட்டாவி விடுவதை வெறுக்கிறான். உங்களில் ஒருவன் தும்மி(அல்ஹம்து லில்லாஹ் எனக்கூறி)அல்லாஹ்வைப் புகழ்ந் தால் அதைக் கேட்கின்ற அனைத்து முஸ்லிமின் மீதும் யர்ஹ முக்கல்லாஹ் எனக் கூறுவது கட்டாயமாகும். எனினும் கொட் டாவி விடுவது நிச்சயமாக ஷைத்தான் மூலமாக ஏற்படக் கூடி யதாகும், எனவே உங்களில் யாரேனும் கொட்டாவி விடும் போது முடிந்த அளவு தடுத்துக் கொள்ளட்டும் உங்களில் கொட்டாவி விடுபவனைப் பார்த்து ஷைத்தான் சிரிக்கிறான்(புகாரி).ரசூல் (ஸல்)அவர்கள் கூற நான் கேட்டுள்ளேனென அபூமூஸா அல் அஷ்அரி(ரலி)அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் தும்மி னால் அவர் அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறவும் அவரது சகோதரன் அல்லது நண்பன் யர்ஹமுகல்லாஹ் எனக் கூற வேண்டும்.யர்ஹமுகல்லாஹ் எனக்கூறினால் (தும்மியவன்) யஹ் தீக்குமுல்லாஹ் வயுஸ்லிஹு பாலக்கும் எனக் கூற வேண்டும் (புகாரி). (யர்ஹமுக்கல்லாஹ் என்பதின் பொருள்:அல்லாஹ் உங்க ளுக்குக் கிருபை செய்வானாக! யஹ்தீக்குமுல்லாஹ். என்பதின் பொருள் அல்லாஹ் உங்களுக்கு சரியான வழி காட்டி உங்களின் நிலையை சீர் படுத்தவானாக என்பதாகும்)

ரசூல் (ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டுள்ளேனென அபூ மூஸா அல் அஷ்அரி (ரலி) அவர்கள் கூறினார்கள் உங்க ளிலொருவன் தும்மி அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறினால்

அவனுக்கு பதில் கூறுங்கள். அவன் அல்ஹம்து லில்லாஹ் எனக் கூறவில்லையானால் நீங்கள் பதில் கூற வேண்டாம் (முஸ்லிம்). அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் தும்மினால் தன் கை அல்லது ஒரு துணி யைக் கொண்டு தனது முகத்தை மூடிக் கொள்வார்கள்,அதைக் கொண்டு தனது சப்தத்தையும் தாழ்த்திக் கொள்வார்கள் (அஹ்மது, திர்மதி, அபூதாவூத்)

**பயன்கள்**

1–தும்மியவர் அல்ஹம்து லில்லாஹ் எனச் சொல்வதைக் கேட் கின்ற அனைவரும் யர்ஹமுக்கல்லாஹ் எனக் கூறுவது விரும்பத்தக்கதாகும்.
2–அவர் அல்ஹம்து லில்லாஹ் கூறவில்லையானால் யர்ஹமுக் கல்லாஹ் கூறவேண்டியதில்லை.
3–கொட்டாவி விடுவதைத் தடுப்பதும், வாயை மூடிக் கொள் வதும் விரும்பத்தக்தாகும் .
4–கொட்டாவி விடும்போது கையை வாயில் வைத்துக் கொள் வது விரும்பத்தக்தாகும்.
5–தும்மக்கூடிய நேரத்தில் கையாலோ சிறு துணியாலோ முகத்தை மூடிக் கொள்வது விரும்பத்தக்கதாகும்.
6–தும்மலோ,கொட்டாவியோ விடும் நேரத்தில் சப்தத்தை உயர்த் துவது வெறுக்கத்தக்கதாகும்.

# 25–நண்பன்

அல்லாஹ் கூறுகிறான்:அன்றைய(கியாம)நாளில் அநியா யம் செய்து விட்டவன் தனது இரு கை(விரல்)களைக் கடித்துக் கொண்டு எனக்கு வந்த கைசேதமே! அல்லாஹ் வின் தூதருடன் ஒரு வழியை நான் எடுத்திருக்க வேண்டுமே எனக்கு வந்த கைசேதமே! (என்னைவழிகெடுத்தவனை )நான் நண்பனாக ஆக்கிக்கொள்ளாதிருந்திருக்க வேண்டுமே! நிச்சய மாக நேரான வழி என்னிடம் வந்த பின்னும் அதிலிருந்து

என்னைவழி கெடுத்துவிட்டானே எனக் கூறுவான்.மேலும் ஷைத்தான் மனிதனுக்கு மிக சதி செய்பவனாகிவிட்டான் (25:27−29). மேலும் கூறுகிறான்: அவர்களில் சிலர் சிலரை முன்னோக்கியவாறு பேசிக் கொள்வார்கள்.அவர்களில் ஒருவன் எனக்கு (உலகில்) உற்ற நண்பன் ஒருவன் இருந்தான் எனக் கூறுவான். (மரணத்திற்குப்பின் எழுப்பப்படுவோம் என் பதை) உண்மைப்படுத்துபவர்களில் நீயும் ஒருவனா? எனக் கேட்டான். நாம் இறந்து மண்ணாகவும், எலும்பாகவும் ஆகி விட்டபின் (மீண்டும்உயிர்ப்பிக்கப்பட்டு) கூலி வழங்கப்படு வோமா? (என்றும் கேட்டான்). (அவ்வாறு கேட்டவனை) நீங்கள் பார்க் (கவிரும்பு)கிறீர்களா?என்றும் கூறுவான். அவர் (கீழே)நோக்கினார். அவனை நரகில் நடுவில் பார்த்தார். (அவனிடம்) அல்லாஹ்வின் மீது ஆணையாக நீ என்னை அழித்து விட முற்பட்டாயே எனக் கூறுவான்.எனது இறை வனருள் இல்லாமலிருந்தால் நானும் (நரகத்திற்கு) கொண்டு வரப்பட்டவர்களில் ஒருவனாக இருந்திருப்பேன். (37:50−57).

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு மனிதன் தனது நண்பனின் மார்கத்தின் மீதே இருப்பான் எனவே உங்களில் ஒருவர் யாருடன் நட்புக் கொள்வதென சிந்தித்துப் பார்த்துக் கொள்ளட்டும். நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள் :அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலேயில்லாத நாளில் அல்லாஹ் தன் அர்ஷின் நிழலின் கீழ் ஏழு நபர்களுக்கு நிழல் கொடுப்பான்: இறைவனுக்காக நேசம் கொண்டு அதன் மீதே ஒன்று சேர்ந்து அதன் மீதே பிரிந்து விட்ட இரு மனிதர்கள்(ஹதீஸின் ஒரு பகுதி).

## பயன்கள்

1−எல்லா மனிதர்களுக்கும் நண்பன் அவசியம் எனவே நன்மை யான காரியங்களை அறிவித்து அதன் மீதே துணையாக இருக் கக்கூடிய நல்ல நண்பனை அடைந்து கொள்வதற்கு நீ முயற்சி செய்து கொள்.

2–நிச்சயமாக நண்பன் இறைவனுக்கு மாறு செய்வதற்கும் இறை நிராகரிப்பிற்கும் உன்னை இழுத்துச் செல்பவனாக இருந்தால் அவனே விரோதிகளில் மிகக் கடிமான விரோ தியாவான்.

3–கா∴பிர்களை நண்பர்களாக்கிக் கொள்வது பற்றி எச்சரிக்கப்பட் டுள்ளது.ஏனெனில் அவர்கள் முஸ்லிம்கள் இறைவனுக்கு வழிப்படுவதையும், நன்மைகளைச் செய்வதையும் தடுப்பார்கள்.

# 26. பொறுமை

அல்லாஹ் கூறுகிறான்: ஈமான கொண்டவர்களே! நீங் கள் பொறுமையாக இருங்கள் (இன்னல்களை) சகித்துக் கொள் ளுங்கள் (3:200). மேலும் கூறுகிறான்: நிச்சயமாக நாம் உங் களை ஓரளவு பயத்தாலும்,பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றை குறைப்பதாலும் சோதிப்போம் (நபியே)பொறுமையாளர்களுக்கு நற் செய்தி கூறுங்கள் (2:155).

சுஹைப் இப்னு ஸினான் (ரலி) அவர்கள் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூறினார்கள் :முஃமின்கள் விஷயத்தில் நான் மிகுந்த சந்தோசம் கொள்கிறேன், காரியங்கள் அனைத்தும் அவனுக்கு நன்மையாகவே உள்ளது அவனுக்கு மகிழ்ச்சியான காரியம் ஏற்பட்டால் நன்றி செலுத்துகிறான்,அது அவனுக்கு சிறந்ததாக ஆகிவிடுகிறது.தீங்கு ஏற்பட்டால் பொறுத்துக் கொள் கிறான் அதுவும் அவனுக்கு சிறந்ததாக ஆகிவிடுகிறது (முஸ்லிம்). ரசூல் (ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டுள் ளேன் என அனஸ் (ரலி)அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் கூறு கிறான் எனது அடியானை அவனுக்குப் பிரியமான இரண்டை (இருகண்களை இல்லாமலாக்குவதை)க் கொண்டு நான் சோதித்து அதை அவன் பொறுத்துக் கொண்டால் அவனுக்கு அவ்விரண்டிற்குப் பகரமாக சுவர்க்கத்தைக் கொடுப்பேன் (புகாரி). ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்:ஒரு முஸ்லிமுக்கு கஷ்டம், நோய்,

கவலை, வேதனைகள், காலிலே தைக்கின்ற முட்கள் உட் பட்ட எந்த சோதனைகள் அவனுக்கு ஏற்பட்டாலும் நிச்சயமாக அல்லாஹ் அதன் மூலமாக ஒரு பாவத்தை அழித்து விடுகிறான்.மேலும் ரசூல் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் முஃமினான ஒரு ஆண், முஃமினான ஒரு பெண் இவர்களின் உடல்கள், குழந்தைகள், பொருள்கள் ஆகியவற்றில்சோதனை தொடர்ந்து இருந்து கொண்டேயிருந்து அதன் இறுதியாக அவர்கள் எந்த பாவமுமின்றி தங்களின் இறைவனைச் சந்திப்பார்கள்.

**பயன்கள்**

1−எல்லாக் காரியங்களையும் பொறுத்துக் கொள்வதின் மீது ஆர்வ மூட்டப்பட்டுள்ளது.கோபம் கொள்வது பற்றி எச்சரிக் கப்படடுள்ளது. நிச்சயம் கோபம் நன்மையைப் போக்கி விடுகிறது.

2−நிச்சயமாக ஒரு முஸ்லிமைச் சோதனை தீண்டுவதால் அவனது பாவங்கள் அழிக்கப்படுகின்றன.

3−வணக்க, வழிபாடுகளிலும் பாவங்களை விடுவதிலும் பொறுமையாகயிருப்பது மிகச் சிறந்த பொறுமை யாகும்.

4−முஸ்லிம் தனக்கென இறைவன் பங்கிட்டுக் கொடுத்ததை திருப்தி கொள்வது அவசியமாகும்.

நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவனாகவும், நுட்ப ஞானமுடையவனாகவும் இருக்கிறான்.அடியார்களின் சாதக, பாதகங்களை அவனே மிக்க அறிந்தவனாக இருக்கிறான்.

وصلى ا لله وسلم على نبينا محمد وعلى آله وصحبه أجمعين.

والحمد لله رب ا لعالمين.




# أحكام

# وآداب إسلامية



المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالعليا والسليمانية وشمال الرياض
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
هاتف ٤٧٠٤٤٦٦ / ٤٧٠٥٢٢٢ ناسوخ ٤٧٠٥٠٩٤ - ص.ب ٨٧٩١٣ الرياض ١١٦٥٢